‘ஏழை பங்காளர்’

# திரு. கேசவப் பிள்ளை



பாரதி பண்பாட்டுக் கழகம்

அனந்தபுரம். (ஆ.பி.)

# 'ஏழை பங்காளர்'
# திரு. கேசவப் பிள்ளை

தெலுங்கு மூலம்

திரு ஆர். ஸ்ரீராமுலு. பி.ஏ., எல்.எல்.பி.,

தமிழாக்கம்

திரு. என். கிருபானந்தன். எம்.ஏ.

—: வெளியீடு :—

பாரதி பண்பாட்டுக் கழகம்

(அனந்தபூர் தமிழ்ச் சங்கம்)

14/96, கமலா நகர், அனந்தபுரம் (ஆ.பி.)

முதற் பதிப்பு: ஜனவரி, 1987.
பிரதிகள் : 1200

For Copies contact:

Sri. P. Damodaram Pillai,
10-1-49, Chettipaliem Road,
PODANUR (Coimbatore Dt)
641023

N. Krupanandam
Lecturer in Tamil
Department of Telugu
Sri Krishnadevaraya University
ANANTAPUR (A p)
515003.

விலை. ரூபாய் நான்கு மட்டும்.

---

அச்சிட்டோர்: மேரேலால் பவர் பிரஸ். சென்னை-14

# அன்பு காணிக்கை

"எங்கள் தமிழ்ச் சங்கத்தின் வளர்ச்சியில் பெரிதும் ஈடுபாடு கொண்டு பாரதியைப் பற்றி அருமை சொற்பொழிவுகள் பல வாற்றிய அன்பர்; பகவான் ரமண மகரிஷியின் பக்தர், பெரியவர்

## திரு. பி. எஸ். நாராயணன் அவர்கள்

24-12-86 அன்று கழகத்தைக் கண்ணீர் கடலில் ஆழ்த்தி மீளா உறக்கத்தில் ஆழ்ந்து விட்டார். அன்னருக்கு இச் சிறிய நூலை அன்பு காணிக்கையாக்குகிறேன்.

நி. கிருபானந்தன்.

# அணிந்துரை

பேராசிரியர் பொன். சௌரிராசன் எம். ஏ, பி. எச். டி.,

தமிழ்த் துறைத் தலைவர்

திருவேங்கடவன் பல்கலைக் கழகம், திருப்பதி.

மனிதன் மனிதனாக வாழ்தல் மிக மிக உயர்ந்தது; இந்தியனாக வாழ்தல் மிக உயர்ந்தது; தமிழனாக வாழ்தல் உயர்ந்தது. திரு. கேசவப் பிள்ளை அவர்கள் ஒரே நேரத்தில் மொழிப் பற்றுள்ள தமிழனாகவும் விடுதலை உணர்வுடைய இந்தியனாகவும், உயிர் இரக்கமுள்ள மனிதனாகவும் வாழ்ந்த மிக மிக உயர்ந்த உலக மனிதர்களுள் ஒருவர். இத்தகு மாமனிதர் வாழ்வு வளரும் குழந்தைக்கு வழிகாட்டியாகவும் வளர்ந்த மனிதருக்கு ஊக்கம் தருவதாகவும் அமையும்.

இதனைத் தெலுங்கிலிருந்து தமிழ் மொழியில் ஆக்கித் தந்துள்ளார் திரு என். கிருபானந்தன். எம். ஏ. அவர்கள். தெளிவும் செறிவும் கொண்ட மொழியில் குறுகிய அளவில் ஒரு பெரிய வாழ்வை வடித்துத் தந்துள்ள சிறப்பு அவருக்கு உரியது.

இதனை இன்றைய தமிழ் உலகம் ஏற்று, இதனில், இடம் பெற்றுள்ள சான்றோர் கேசவப் பிள்ளையின் தொண்டையும் துணிவையையும் ஓரிரு நிமிடங்களேனும் நெஞ்சில் நினைக்கு மாயின் அதுவே இதனை இயற்றி யோர்க்கு ஆறுதலாக இருக்கும்.

நன்று மறவாத் தமிழ் உலகம் இதனை ஏற்றுப் போற்றும்; போற்ற வேண்டும்.

திருப்பதி, 
14-5-1986

பொன். சௌரிராசன்.

# முன்னுரை

டாக்டர் எம். எக்ஸ். மிராண்டா எம். ஏ, பிஎச். டி.

வரலாற்றுத் துறைத் தலைவர்,

திரு. கிருஷ்ணதேவராயர் பல்கலைக் கழகம்
அனந்தபுரம். (ஆ. பி)

உயர்திரு குத்தி கேசவப் பிள்ளை அவர்களின் வாழ்க்கை வரலாறு பற்றிய சிறு நூலைப் படித்தேன். இதனைத் திரு. ஆர். ஸ்ரீராமுலு அவர்கள் எழுதிய தெலுங்கு மூலத்திலிருந்து திரு என் கிருபானந்தன் அவர்கள் தமிழில் ஆக்கித் தந்திருக்கிறார்கள்.

பிள்ளை அவர்களின் வாழ்க்கை வரலாறு படிக்கப் படிக்க ஒரு காவியம் போன்றிருந்தது. அவர்கள் உயர்ந்த குறிக்கோள்களுடனும் கொள்கைப் பிடிப்புடனும் வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த பெரியார்

பிள்ளை அவர்களின் ஆழ்ந்த நாட்டுப் பற்றும், சமூக பொறுப்புணர்வும், ஏழையர் பால் அவர்கள் காட்டிய பரிவும், கைதிகள், கூலிகள் போன்ற சமுதாயத்தால் ஒதுக்கப் பட்டுள்ள மக்களிடம் அவர் கொண்டிருந்த கருணை உள்ளமும், அனைத்து உயிர்களிடம் அவர் காட்டிய அளவில்லாத பற்றும் என்னை மிகவும் கவர்ந்தன.

இவை மட்டுமின்றித் தமிழ் மண்ணில் பிறந்திருந் தாலும் தெலுங்கு நாட்டைத் தனது தாயகமாகக் கொண்டு அம்மக்களுடன் உடன் பிறப்புகள் போன்று இரண்டறக் கலந்து அவர்களுக்காகவே அவர் வாழ்ந்த பெருவாழ்வு, அன்னாரிடம் மேலோங்கி நிற்கும் நாட்டின் ஒருமைப் பாட்டுணர்வுக்கு நல்லதொரு எடுத்துக் காட்டாகும்.

திரு. என். கிருபானந்தன் அவர்கள் மூல நூலை எளிய நடையில், இனிய முறையில், சுவையூட்டும் வகையில் தமிழில் அமைத்திருக்கிறார்கள். அவர்களின் பணியைப் பாராட்டுகிறேன். மேலும் பல நூல்களைப் படைக்க வேண்டுமென விரும்புகிறேன்.

இந்நூல் அனைவரும், குறிப்பாக, இந்திய விடுதலைக்குப் பின் பிறந்த இளைய தலைமுறைகள் படித்துப் பயன் பெற வேண்டிய அரிய நூலாகும். நன்றி.

அனந்தபுரம் எம். எக்ஸ். மிராண்டா.

29-4-86

# நன்றியுரை

'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்கிறார் தெய்வப் புலவர். இதற்கு மாறாக, கடலில் வீழும் மழைத் துளிகளாய்ப் பலர் தோன்றினும் அவர்கள் "உண்டுறங்கி யிடர் செய்து செத்திடும் கலக மானிடப் பூச்சி"களாய் யாருக்கும் பயனற்று மறைகின்றனர். முத்துச் சிப்பியில் விழும் சில மழைத்துளிகள் முத்துக்களாக-ஆணி முத்துக்களாக - மாறுவதைப் போல் மிகச் சிலரே புகழொடு தோன்றி அமரராகின்றனர். அச்தகைய மிகச் சில பெரியோர்களில் திரு. கேசவப்பிள்ளையும் ஒருவர்.

அன்னாரின் வாழ்க்கை வரலாற்றைச் சுருக்கமாகச் சுந்தர தெலுங்கினில் வெளியிட்டுள்ளார் திரு. ஆர். ஸ்ரீ ராமுலு அவர்கள். அவர்களுக்கு என் இதயங்கனிந்த நன்றிகள்.

தம் பெரும் பணிகளுக்கிடையில் வாழ்த்துரை எழுதியருளிய என் அன்பு பேராசிரியர் டாக்டர். பொன் சௌரிராசனார் அவர்களுக்கும், முன்னுரை எழுதியளித்த டாக்டர். எம். எக்ஸ். மிராண்டா அவர்களுக்கும் என் இதயங் நிறைந்த வணக்கங்களும் நன்றிகளும் உரித்தாகுக

இந்த நூல் வெளியாவதற்கு மூல காரணமானவர் திரு. கேசவப் பிள்ளையவர்களின் அருமை புதல்வர் திரு. தாமோதரம் பிள்ளை அவர்கள். இந்நூலின் அச்சுச் செலவை அவரே ஏற்றுக் கொண்டுள்ளார்.

இவ்வாறு தன் தந்தையின் புகழ் வளர்ச்சிக்கு அயராது பாடுபடும் இவரது பக்தி, பாராட்டத் தக்கது. தந்தையின் புகழ் உள்ள மட்டும் தனயனின் பெயரும் தரணியில் தழைத்திருக்கும். இவருக்கு என் இயங்கனிந்த நன்றிகள் உரித்தாகுக.

அச்சுப் பணியை மேற் பார்வையிட்டு உதவிய அன்பர். திரு. ஆர். பத்மநாபன் பி. காம்., அவர்களுக்கு இதனை அழகாக அச்சிட்டு மேரேலால் அச்சகத்தாருக்கும் மனங் குளிர்ந்த நன்றிகள்.

என். கிருபானந்தன்

# பொருளடக்கம்



திரு. கேசவப் பிள்ளை (1860-1933)

# I. இராயல சீமை

அனந்தபுரம், கடப்பா, கர்நூல் மாவட்டங்களுக்கு 1928-ஆம் ஆண்டு வரை 'தத்த மண்டலம்' என்ற பெயர் வழங்கி வந்தது. 1928 ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 18-ஆம் நாள் நந்தியாலாவில் தத்தமண்டல மகாசபை நடை பெற்றது. அதற்கு கடப்பா கோடி ரெட்டியவர்கள் தலைமை தாங்கினார். அச்சபையில் கலந்து கொண்ட பெரியவர்களனை வரும் 'தத்த மண்டலம்' எனும் பெயர் அவமான மானதொன்று எனத்தம் வேதனையை வெளிப் படுத்தினர். தம் பகுதிக்கு 'இராயல சீமை' என்ற பெயர் நல்லதென்று தீர்மானம் ஒன்றை இயற்றினர். 'தத்த மண்டலம்' என்றால், ஹைதராபாது நிஜாம் அரசரால் பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனியாருக்குத் 'தத்து செய்யப்பட்ட' அதாவது 'வழங்கப் பட்ட' மாவட்டங்கள் என்று பொருள். ஆங்கிலத்தில் Ceded Districts என்பர்.

அச்சபையில் பங்கேற்ற தலைவர்கள் காடிசர்ல ஹரிசர்வோத்தம ராவ் அவர்களும் 'இலக்கியச் செல்வர்' சிலுகூரி நாராயணராவ் அவர்களும் இந்தப் பெயர் மாற்றத்திற்கு முக்கிய காரணமானவர்கள். 'இராயல சீமா' என்ற சொல்லைப் பழங்கவிஞர் நடமிண்டி வேங்கடபதி அவர்கள் தன்னுடைய 'அபிஷிக்த ராகவம்' எனும் காவியத்தில் பயன் படுத்தியுள்ளார்.

கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் இராயல சீமை பகுதியை விஜய நகர அரசர்கள் ஆண்டனர். அக்காலத் தில் இப் பகுதியை இரண்டாகப் பகுத்திருந்தனர். ஒன்று பெனு கொண்டா மார்ஜவாடி. மற்றது, உதயகிரி மார்ஜ வாடி.

'மார்ஜவாடி' என்றால் 'மகாராஜா வாடி' என்று பொருள். கடப்பை பகுதிக்கு 'ரே நாடு' என்றும் பெயர். அதனால் 'இராயல சீமை' எனும் பெயர் முன் வழங்கிய பெயர்களுக்குத் தகுந்தவாறே அமைந்துள்ளது. 'இராயல சீமை' என்பது, விஜய நகரில் ஆட்சி புரிந்த ராயர்களின் ஆட்சிக்கு உட்பட்ட பிரதேசம் என்று பொருளாகும்.

# 2. வரலாற்றில் குத்தி

இராயலசீமை மாவட்டங்களில் ஒன்றான அனந்த-புரம் பொருளாதார அடிப்படையில் பிற்பட்டதாக இருப்பினும் மற்ற துறைகளில் எவ்வளவோ முன்னேறியுள்ளது. இம் மாவட்டத்தில் குத்தி (Gooty) என்பது ஒரு முக்கியமான பட்டினம். இது சென்னை-குந்தகல் புகைவண்டிப் பாதையில் அமைந்துள்ளது. தலைமுறை தலை முறைகளாகக் குத்திப் பட்டினம் தன் தனித்தன்மையைச் சிறப்பாக வெளிப் படுத்தி வந்துள்ளது.

அசோகர் காலத்திய கல்வெட்டு ஒன்று குத்தியின் அருகில் உள்ள 'எர்ர குடி' என்ற இடத்தில் கிடைத்துள்ளது.

திரு கிருஷ்ண தேவராயர் காலத்திய கற்கோட்டை குத்தியில் காண வேண்டிய தொன்றாகும். இராயரின் பெரும் அமைச்சரான 'திம்மரசு'வின் இளமைக்காலம் இந்த ஊரிலேயே கழிந்தது. திரு கிருஷ்ணதேவராயரே குத்திப் பகுதியைச் சார்ந்தவர் என்ற கருத்தும் ஒன்று நிலவுகிறது.

தத்த மண்டலத்தின் கவர்னராக இருந்த சர். தாமஸ் மன்றோவின் சமாதியும் குத்தியிலேயே அமைந்துள்ளது. அவரின் பெயரால் ஒரு பெரிய தர்மசாலை ஒன்றும் இங்கே ஏற்படுத்தப் பட்டுள்ளது.

20-ஆம் நூற்றாண்டில் கூட, குத்தியின் வரலாறு நம் நாட்டினரனைவருக்கும் நன்கு தெரிய காரணமாக இருந்தவர் புகழ்பெற்ற பட்டு கேசவப்பிள்ளை அவர்கள்.

# 3. கேசவப் பிள்ளையின் குடும்பம்

'அகமுடையார்கள்' என்றொரு வைணவப் பிரிவு உள்ளது தமிழ்நாட்டில் வடஆற்காடு மாவட்டத்தின் சுற்று வட்டாரங்களில் இவர்கள் பிள்ளைகளாகவும் முதலியார்களாகவும் வழங்கப்படுகின்றனர்.

இவர்களின் முக்கியத் தொழில் விவசாயம். கிராமப் பகுதிகளில் தலைமைப் பதவிகளில் இருந்து மக்களின் நன்மதிப்பையும் இவர்கள் பெற்றிருந்தனர். கடினமான உழைப்புக்கும் திறமைக்கும் மறுபெயர் 'பிள்ளை' என்பர்

வட ஆற்காடு மாவட்டம் குடியேற்றம் வட்டத்தில் உள்ள 'பட்டு' எனும் ஒருசிறிய கிராமத்தில் திரு. வெங்கடாசலம் பிள்ளை—சுப்பம்மா தம்பதியருக்குத் தோன்றிய எட்டு ஆண் குழந்தைகளில் கேசவப்பிள்ளை ஒருவர்.

சேஷாசலம் பிள்ளை என்பார் மூத்த மகன், 1855ஆம் ஆண்டில் பிறந்தவர். இவர் தமிழில் நற்புலமை மிக்க ஒரு தேச பக்தர்.

அலகாபாத்தில் நடைபெற்ற காங்கிரஸ் மகாசபை கூட்டத்தில் கலந்து கொண்ட திரு சேஷாசலம் 'சுதேச மித்திரன்' எனும் பத்திரிக்கையில் தன் அனுபவங்களை எழுதி மக்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்தியவர். இவர் தம் 38-ஆம் வயதில் 1893-ஆம் ஆண்டு அகால மரணம் அடைந்தார்.

கேசவப் பிள்ளையின் தம்பி விஜயரத்தினம் பிள்ளை ஆவர். இவரும் தமிழில் நல்ல பண்டிதர். இவர் தமிழில் 'பகவத்கீதை' ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் மீது ஆய்வு நூல்கள் எழுதி வெளியிட்டுள்ளார்.

இத்தகைய ஒரு சிறந்த குடும்பத்தில் திரு. கேசவப் பிள்ளை 1860-ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 8-ஆம் நாளில் பிறந்தார். இவரது இளமையில் இவர் குடும்பம் எவ்வளவோ இன்னல்களுக்குட்பட்டது.

1876-77ஆம் ஆண்டில் வந்த பஞ்சம் இக் குடும்பத்தை மிகவும் துன்புறுத்தியது. அப்போது சித்தூர் மாவட்ட உயர் நிலைப் பள்ளியின் மாணவராக இருந்த கேசவப் பிள்ளை அரை வயிற்று உணவோடு வாழ நேரிட்டது. எட்டு குழந்தைகளைத் தமக்கிருந்த சிறிது அளவு நிலம் மற்றும் இரண்டு மூன்று தென்னந் தோட்டங் களின் உதவியால் திரு. வெங்கடாசலம்பிள்ளை வளர்த்து வந்தார்

1878-ஆம் ஆண்டில் 'மெட்ரிகுலேஷன்' தேர்வில் வெற்றியடைந்த கேசவப்பிள்ளை, ராணிப்பேட்டை, திருத்தணி, மாடுபாகம் 'ரெவின்யூ' அலுவலகங்களில் எழுத்தராகப் பணியாற்றினார்.

1879-ஆம் ஆண்டில் 'சாலம்பிரி அம்மாள்' என்பவரோடு கேசவப் பிள்ளைக்குத் திருமணம் நடை பெற்றது.

# 4. எழுத்துத் துறையின் முதன் முயற்சி

குடும்பத்தின் பொருளாதார சீரழிவின் காரணமாக கேசவப் பிள்ளை எந்தப் பல்கலைக் கழகத்திலிருந்தும் பட்டம் பெறும் வாய்ப்பைப் பெறவில்லை. எனினும் அகன்ற உலகில், வாழ்வில், இவர் கற்றுக் கொண்ட அறிவு அளவிடற்கரியது.

1880-ஆம் ஆண்டில் 'செகண்டரி கிரேட்' சட்டத் தேர்வை எழுதினார். சேலம் மாவட்டத்தில் சங்கர துர்கத்தில் சில மாதங்கள் சட்டப் பிரதிநிதியாகப் பணியாற்றினார். புகழ் மிக்க சேலத்து அரசர் விஜயராகவாச்சாரியர்அவர்களோடு பிள்ளையவர்களுக்கு அப்போது ஏற்பட்ட தொடர்பு நெருங்கிய நட்பாக மலர்ந்தது.

சேலத்தில் மதச் சச்சரவு நடைபெற்ற போது தன் தோழர் விஜயராகவாச்சாரியார் சிறையில்துன்புறுவதைக் கண்டு பிள்ளையவர்கள் கடுங்கோபங் கொண்டார். 'ஹிந்து' பத்திரிக்கைக்கு ஒரு கடிதத்தைக் கடும் மொழி கொண்டு எழுதியனுப்பினார். பத்திரிக்கை எழுத்துத் துறையில் அவரது முதன் முயற்சி அதுவே எனலாம்.

## 5. வாழ்வை மாற்றிய நிகழ்ச்சி

வாழ்க்கையை நடத்துவதற்காக மீண்டும் 1881-ஆம் ஆண்டில் திரு. பிள்ளையவர்கள் குத்தி துணை ஆட்சித் தலைவர் அலுவலகத்தில் எழுத்தராகப் பணியிற் சேர்ந்தார். அப்போது சேலம் மாவட்டத்தில் நடைபெற்ற மதக் கலகம் பற்றிய விவரங்களைச் சேகரித்து அனுப்புமாறு 'ஹிந்து' பத்திரிக்கை அவரை வேண்டிக் கொண்டது.

ஓர் ஆண்டு காலம் அவர் சேலத்தில் தங்கி 'ஹிந்து' பத்திரிகையின் விசேஷ நிருபராகவும், 'கிரிமினல்' வழக்கறிஞராகவும் ரெவின்யூ நீதிமன்றத்தில் பணியாற்றினார். நிருபராக கேசவப் பிள்ளை வெளிப்படுத்திய விவரங்களால், சேலம் கலவரத்தின் உண்மை நிலை வெளியாயிற்று. கலெக்டரின் பொறுப்பற்ற தன்மையும், பலருக்கு அநீதியாக சிறைதண்டனை விதிக்கப்பட்டதும் தெரிய வந்தது. பின்னர், சி. விஜயராகவாச்சாரியாரது பெருமுயற்சியால் அனைவரும் விடுதலை பெற்றனர்.

நேர்மையும் நடுவு நிலைமையும் மிக்க நீதிபதிகளும் இருப்பார்களா என அவர் வியந்துகொண்டிருந்த சமயம், சேலம் 'டெபுடி மேஜிஸ்டிரேட்' திரு பி.டி. இராஜகோபாலாச்சாரியார் அவரது குறிக்கோட்களுக்கு ஏற்றவராகத் தோன்றினார். அவர்களுக்கிடையே வயதில் வேற்றுமை இருப்பினும் இருவருடைய நட்பு நெருக்கமாகப் பின்னிப் பிணைந்தது.

திரு. இராஜகோபாலாச்சாரியார் அவர்களுக்குக் குத்திக்கு இடமாற்றம் கிடைத்தது. அவரோடு பிள்ளையவர்களும் குத்தியை அடைந்தார். தமக்கு ஏற்கனவே

நன்கு அறிமுகமான குத்திக்கு மீண்டும் வர நேர்ந்தமை அவருக்கு மனமகிழ்ச்சியை உண்டாக்கியது.

1888-ஆம் ஆண்டில் வழக்கறிஞராக அங்கே வாழத் துவங்கினார்.

1933-இல் மரணமடையும் வரை குத்தியிலேயே வாழ்ந்தார் திரு பட்டு கேசவப் பிள்ளை. குத்தி கேசவப் பிள்ளையாக ஒரு வரலாற்றை உண்டாக்கினார்.

# 6. சிறியவனுக்குப் பெரிய பட்டம்

1884-ஆம்ஆண்டில் ஒருநாள். அனந்தபுரம் மாவட்ட ஆட்சித் தலைவராக இருந்த 'குருக் ஷாங்க்' (Cruikshank) என்பவர் நீர்ப்பாசனப் பணிகளை மேற்பார்வையிட குத்திக்கு வந்தார்.

இருபத்து நான்கு வயதான ஓர் இளைஞர் தம் நண்பர்களுடன் ஆட்சித் தலைவரைச் சந்தித்தார். குத்தி நீர் பங்கீடு பற்றிய பல விபரங்களை எடுத்துரைத்தார். 'ஜில்லா போர்டு' அதற்கென நிதியை ஒதுக்க வேண்டிய இன்றியமையாமையை வலியுறுத்தினார்.

ஆட்சித் தலைவர் இளைஞரின் ஆர்வத்தை, திறமையைக் கண்டு பெரு மகிழ்வுற்றார். அதன் விளைவாக அவ்விளைஞரை ஜில்லா போர்டு எனப்படும் மாவட்ட குழுவில் உறுப்பினராக நியமிக்க விரும்பி அவ்விளைஞரின் விருப்பத்தைக் கேட்டார்.

அந்த இளைஞர் வேறு யாரோ அன்று. நம் கேசவப் பிள்ளை அவர்களே. அவர், பணிவுடன், ஆட்சித் தலைவரிடம், "என்னை வேண்டாம், ஐயா. ஆங்கிலம் நன்கு படித்தவரும் நிலச்சுவான்தாருமான திரு சீனிவாச ராவ் அவர்களை நியமியுங்கள்" என்று வேண்டிக் கொண்டார்.

அவரது மறுமொழியைக் கேட்டு வியப்படைந்த ஆட்சித் தலைவர் திரு. பிள்ளை, திரு. சீனிவாச ராவ் இருவரையுமே மாவட்டக் குழுவின் உறுப்பினர்களாக நியமித்தார்.

1882-ஆம் ஆண்டில் குத்தியில் 'மக்கள் கழகம்' (People's Association) என்ற ஓர் அமைப்பு தோற்று விக்கப்பட்டது. அக்கழகத்தின் சார்பிலேயே அன்று ஆட்சித் தலைவரை திரு. பிள்ளையவர்கள் சந்தித்தார், அவ்வூரில் உள்ள குறைபாடுகளைத் தீர்ப்பதற்கு முயல்வதே அக்கழகத்தின் குறிக்கோள்.

1884-ஆம் ஆண்டு மே திங்களில் சென்னையில் தோற்றுவிக்கப்பட்ட மக்கள் கழகத்திற்குக் குத்தி மக்கள் கழகம் தொடர்புடைய கீழ் அமைப்பாகியது. 1884-டிசம்பர் திங்களில் மக்கள் கழகத்தின் ஆண்டுவிழாவில் குத்தி கேசவப் பிள்ளையவர்களோடு திரு ஜே. சீனிவாச ராவ், வை. சௌடப்பா அவர்களும் பங்கேற்றனர்.

1884- ஆம் ஆண்டு, இந்திய மக்களுக்குப் பல விதங்களில் நன்மை செய்தவரான வைஸ்ராய் ரிப்பன் பிரபு (Lord Ripon) தமது பதவிக் காலம் முடிந்து தாயகம் திரும்பிய போது, பம்பாய் நகரில் அவருக்கு மாபெரும் வழியனுப்பு உபசார விழா நடந்தது. இந்திய நாடெங்கிலிருந்தும் மக்கள் பிரதிநிதிகள் இந்த உபசாரத்தில் கலந்து கொண்டார்கள். குத்தி மக்கள் கழகத்தின் பிரதிநிதியாக. கேசவப் பிள்ளை பம்பாய்க்குச் சென்று இந்த உபசாரத்தில் கலந்து கொண்டார்.

1882-ஆம் ஆண்டிலிருந்து ஐந்து ஆண்டுகள் இந்தக் கழகத்திற்குச் செயலாளராகவும், மற்றொரு இருபது ஆண்டுகள் அதன் தலைவராகவும் திரு. பிள்ளையவர்கள் பெரும் பணியாற்றினார்.

# 7. தெலுங்கு நாட்டின் தமிழ்ப் பிரதிநிதி

1885-ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 28-ஆம் நாள், பம்பாயிலுள்ள கோகுல்தாஸ் தேஜ்பால் சமிஸ்கிருத கல்லூரியில் இந்திய தேசீய காங்கிரஸின் முதல் மாநாடு நடைபெற்றது.

ஆக்டேவியஸ் ஹ்யூம் எனும் ஓய்வு பெற்ற அரசு ஊழியரும் தாதாபாய் நௌரோஜி, பிரோஜ்ஷா மெஹதா முதலான பெருந் தலைவர்களும் அம்மாநாட்டில் பங்கேற்றனர்.

மொத்தம் 75 பிரதிநிதிகளில் சென்னை மாநிலத்தி லிருந்து வந்திருந்த 22 பிரதிநிதிகள் அடங்குவர். அனந்த புரம் மாவட்டத்திலிருந்து ஒரே ஒரு பிரதிநிதி-கேசவப் பிள்ளை-கலந்து கொண்டார். டபிள்யூ-ஸி. பேனர்ஜி அச்சபைக்குத் தலைமை தாங்கினார்.

திருமதி அன்னிபெசண்ட் அம்மையார் தலைவியாக இருந்தபோது காங்கிரஸ் கட்சியின் மூன்று இணைச் செயலாளர்களில் ஒருவராக திரு. கேசவப் பிள்ளை பணியாற்றினார்.

1918-ஆம் ஆண்டுக்குப் பிறகு கேசவப்பிள்ளையவர் கள் காங்கிரஸ் கட்சியிலிருந்து விலகி விட்டார். எனினும் காங்கிரஸ் சபைகளுக்குச் செல்லும் பிரதிநிதிகளுக்குத் தாடிபத்திரி, குத்தி, குந்தகல் புகை வண்டி நிலையங் களில் இலவசச் சிற்றுண்டிகளை ஏற்பாடு செய்தார்.

அரசாங்கத்தோடு அவர் நெடுங்காலம் ஒத்துழைப்பு தோரணியைக் கொண்டிருந்தாலும் அவரது நாட்டு பக்தி

சற்றும் ஐயுறத்தக்க தன்று. காங்கிரஸ் கட்சியிலிருந் தாலும் மக்கள் கழகத்தில் தொடர்பு கொண்டிருந்தாலும் அவரது எண்ணங்கள் சுதந்திரமானவை.

அவர் எக் கட்சியையும் சார்ந்தவரல்லர் என்று கூறலே பொருத்தம். தேச சேவைக்கு முதலிடமே த்விர கட்சிகளுக்கு அல்ல வென்பது அவரது திடமான எண்ணம்.

அவரது நோக்கம், குறிக்கோள் பரந்தது. குலம் மதங்களோடு தொடர்பற்ற தெளிவான அரசியல் தலைவர் திரு. பிள்ளையவர்கள்.

# 8. ஹம்பாண்ணா அமர காவியம்

1893-ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள். 4-ஆம் நாள். குந்தகல்லில் இறங்கிய இராணுவ வீரர்களின் கூட்டமொன்று மாலை நேரத்தில் பாதையில் நடந்து சென்று கொண்டிருந்தது.

சுண்டல் விற்கும் இளவயது 'குருப' இனத்துப் பெண்ணொருத்தியும், சோளப் பயிரின் காவலுக்குச் சென்ற 'லிங்காயத்து' இன இள விதவை ஒருத்தியும் அதே பாதையில் தத்தம் வீட்டிற்குத் திரும்பி வந்து கொண்டிருந்தனர்.

ஆறு இராணுவ வீரர்கள் தீய எண்ணத்துடன் அப் பெண்களைப் பின் தொடரத் தொடங்கினர். பெண்களிருவரும் பயந்து, பதறி, வேகமாக ஓடத் தலைப் பட்டனர். 'குருப' இனத்தைச் சார்ந்த ஹம்பண்ணா பணிபுரியும் 'ரயில்வே கேட்' அருகில் சென்று அவரது உதவியைக் கோரினர் அப் பெண்கள்.

ஹம்பண்ணா அப் பெண்களிருவரையும் தம் 'ஷெட், டில் ஒளிந்து கொள்ளச் சொன்னார். இராணுவ வீரர்கள் 'ஷெட்'டை நெருங்கி கதவைப் பிளக்க முயன்றனர்.

ஹம்பண்ணா அவர்களை எதிர்த்தார். அனைவரும் புறமுதுகிட்டோட ஒருவன் மட்டும் தன் கைத் துப்பாக்கியால் ஹம்பண்ணாவின் துடை மீது சுட்டான். ஹம்பண்ணா கீழே விழுந்து மயக்க மடைந்தார். இராணுவ வீரர்கள் பயந்து தம் முகாமுக்கு ஓடி விட்டனர். ஹம்பண்ணா உடனே மருத்துவமனையில் சேர்க்கப் பட்டார். ஆயினும் சிகிட்சை பலனளிக்காமல் குத்தி மருத்துவமனையில் மரணமடைந்து விட்டார்.

அவருக்கு மருத்துவம் செய்த மருத்துவர் இச்செய்தியினைக் கேசவப் பிள்ளைக்குத் தெரிவித்தார்.

திரு. பிள்ளையவர்கள் உடனே 'ஹிந்து' நாளிதழில் இதை எழுதி மக்களிடையே மாபெரும் கொந்தளிப்பை உண்டாக்கினார். வழக்குப் பன்னாட்கள் நடைபெற்றது. இறுதியில் வழக்கைத் தள்ளி விட்டனர்.

ஆனால் பிள்ளையவர்கள் ஹம்பண்ணாவிற்கு நினைவுச் சின்னம் (வீரக்கல்) ஒன்றை நிறுவ 'ஹிந்து' பத்திரிக்கையின் மூலம் நன்கொடையைச் சேகரித்தார். சர். தாமஸ் மன்றோவின் தர்ம சாலையின் அருகில் அமரவீரர் ஹம்பண்ணாவிற்கு நினைவுச் சின்னம் அமைக்கப்பட்டது. அதை அப்புறப் படுத்த வேண்டும் என்று சூழ்ச்சிகள் பல நடைபெற்றன. ஆனால் 'கர்ம வீரர்' கேசவப் பிள்ளையின் தளரா முயற்சியின் பயனாக அச் சூழ்ச்சிகள் சின்னா பின்னமாக்கப்பட்டன.

இன்றும் அந் நினைவுச் சின்னம் குத்தியில் சிதறாமல் இருக்கிறது. கவிஞர்களுக்கு ஹம்பண்ணாவின் வாழ்க்கை கவிதைப் பொருளாகியது. வித்வான் விஸ்வம் தெலுங்கு மொழியில் 'ஒக நாடு' எழுத, மாஸ்தி வேங்கடேச அய்யங்கார் கன்னட மொழியிலும், ராகவன் வட மொழியிலும் ஹம்பண்ணாவைப் பற்றி காவியங்கள் எழுதியுள்ளனர்.

# 9. தொழிலாளர் போராட்டத்தின் மூலத்தூண்.

1917-ஆம் ஆண்டில் சென்னை நெசவுத் தொழிலாளர்களின் ஏழ்மை நிலை கேசவப் பிள்ளையவர்களின் கவனத்தை ஈர்த்தது. அவர் உடனடியாக 'ஹிந்து' பத்திரிக்கையில் ஒரு கட்டுரையை வெளியிட்டார்.

'ஸ்ரீ வேங்கடேஸ்வரா குணாம்ருத வர்ஷிணி' சபையினர் திரு பிள்ளையவர்களின் கட்டுரையைப் படிக்க நேரிட்டது. அவர்கள் தொழிலாளர்களின் இன்னல்களைக் களைவதற்குக் 'கங்கணம்' கட்டிக் கொண்டனர்.

அச்சபையைச் சார்ந்த, சமூக சேவையில் ஆர்வம் மிக்க திரு ஜி. இராமானுஜுலு நாயுடு, திரு ஜி. செல்வபதி செட்டி இருவரும் 'நியூ இண்டியா' பத்திரிக்கை அலுவலகத்திற்குச் சென்றனர்.

திரு. B. P. வாடியா அப்போது அப்பத்திரிக்கையின் உதவி ஆசிரியராக இருந்தார். அவர் தொழிலாளர்கள் அனைவரையும் ஒருங்கு சேர்த்தார்.

சென்னை நெசவுத் தொழிலாளர் சங்கம் 1918-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 18-ஆம் நாள் ஏற்படுத்தப் பட்டது. பாரத நாட்டில் ஏற்படுத்தப் பட்ட முதல் தொழிலாளர் சங்கம் அதுவே.

அப்போது சங்கத்தின் மாதச் சந்தா ஒரு அணா மட்டுமே. 1931-செப்டம்பர் திங்களில் சென்னை தொழிலாளர் சங்கம் (Madras Labour Union) தம் சொந்தக் கட்டிடத்தைக் கட்டிக் கொண்டது.

அன்றைய கூட்டத்திற்குத் திரு. டி. வி. கல்யாண சுந்தர முதலியார் தலைமை தாங்கினார். சுந்தரம், வாடியா சங்கத்தில் துவக்கத்தில் பணியாற்றியவர்கள். அக் கூட்டத்தில் திரு. கேசவப் பிள்ளையின் உரை மிகவும் எழுச்சி மிக்கதாக அமைந்தது.

''இவ்வுலகம் தொழிலாளர்களுடையது. உலகில் உயர்ந்தவர்கள் அனைவரும் தம் வாழ்வின் துவக்கத்தில் துன்புற்றவர்களே. தொழிலாளர்கள் நன்னடத்தையைப் பழக்கப் படுத்திக் கொள்ள வேண்டும். தம் குழந்தைகளுக்கு நல்ல கல்வியறிவையும், நன்னடத்தையும் அளிக்க வேண்டும்'' என்று அவர் தொழிலாளர்களை வேண்டிக் கொண்டார்.

# 10. "கூலி கிங்"

தென் அமெரிக்காவில் வடக்கு பாகத்தில் கயானா (Guiana) என்ற நாடு உள்ளது. அதில் மூன்றில் ஒரு பாகம் ஆங்கிலேயர் ஆட்சியின் கீழிருந்தது. அதனைப் 'பிரிட்டிஷ் கயானா' என்பர். அதன் தலைநகர் ஜார்ஜ் டவுன். அது ஒரு வளமான நாடு. அங்கு நெல், கரும்பு முதலிய பயிர்கள் நன்கு பயிராகும். வேலை செய்ய ஆட்கள் கிடைக்காமையால் ஆங்கிலப் பண்ணையாளர் கள் நம் பாரத நாட்டிலிருந்து விவசாயக் கூலிகளை அங்கு அழைத்துச் சென்றனர். அவ்வகையில் கயானா மக்கள் தொகையில் இந்திய வழி மக்கள் நாற்பது சதவீத மாக உயர்ந்தனர். அவர்கள் தலைமுறைத் தலைமுறை களாக அங்கேயே நிலைத்து திருமண உறவுகளைக் கொண்டு அந்த நாட்டில் வாழ்ந்தனர்.

ஆங்கிலேயர்களின் அடக்கு முறை நாளுக்கு நாள் அதிகரித்தது. 1920-21-ஆம் ஆண்டில் மூன்று நூறாயிரம் இந்திய வழி மக்கள் பாரத நாட்டுத் தலைவர்களிடம் தம் குறைகளையும் இன்னல்களையும் எடுத்துரைத்தனர்.

நம் நாட்டரசு கேசவப் பிள்ளையின் தலைமையில் ஒரு குழுவை அமைத்தது. 1922 பிப்ரவரி திங்கள் 12-ஆம் நாள் இக் குழு கயானாவை அடைந்தது. பல்வேறு பட்டினங்களிலும் இக் குழுவிற்கு இனிய வரவேற்பு அளிக்கப்பட்டது. ஆயிரம் இந்தியர்களில் ஐநூறு பேர் களுக்கு மட்டுமே ஓட்டுரிமை அளிக்கப் பட்டது.

தொழிலாளர் நிலை அங்கு மிகவும் மோசமாக இருந்தது. பன்னிரண்டு வயதிற்குட் பட்ட சிறார்களைப்

பணியில் அமர்த்தலாகாது என்ற வரையறை யிருப்பினும் அது செயலாற்றப் படவில்லை. குறைந்த பட்ச ஊதியம் என எதுவும் இல்லை. முதலாளிகளின் அருளின் அடிப்படையில் கூலிகளின் வாழ்க்கைநிலை அமைந்திருந்தது.

கூலிகளுக்கு அடிக்கடி தக்க காரணம் இல்லாத போதும் கடுந் தண்டனைகள் அளித்துத் துன்புறுத்தினர் கூலிகளில் பெரும் பான்மையோருக்குப் படிப்பு இல்லை. மக்களிடையே பள்ளிக் கூடங்களை அமைத்துக் கொள்ளும் சக்தியும் யுக்தியும் இல்லாதிருந்தது. இந்துக்களின் திருமணச் சடங்குகள் மதிக்கப் படவில்லை

கேசவப் பிள்ளை மக்களோடு நன்கு கலந்து பேசி அவர்களின் இன்னல்களை அறிந்து கொண்டார். மனு பத்திரங்களை வாங்கிக் கொண்டார். கூலிகள் அவரைக் 'கூலிகிங்க்' (Coolie king) என்று அன்போடு அழைத்தனர்.

திரு பிள்ளையவர்களுக்கு 1913-இல் 'ராவ் பகதூர்' 1917-இல் 'திவான் பகதூர்' 1925-இல் 'கமாண்டர் ஆப் தி பிரிட்டிஷ் எம்பயர்' (C. I. E) எனும் பட்டங்களை அளித்து அரசு கௌரவித்தது. ஆயினும் தமக்குக் கிடைத்த எல்லா பட்டங்களையும் விடத் திரு. பிள்ளையவர்கள் கூலிகள் மன மகிழ்ச்சியுடன் தமக்களித்த 'கூலி கிங்க்' (Coolie king) எனும் பட்டத்தையே பெரிதும் போற்றி, மதித்து விரும்பினார்.

கேசவப் பிள்ளையின் தூதுக் குழு உறுப்பினர்கள் கயானாவுக்குச் சென்ற நாட்களில் அங்கிருந்த இந்திய வழி மக்களிடையே பலவித அரசியல் கட்சிகள், பிரிவுகள் இருந்தன.

திரு பிள்ளையின் தலைமையிலான குழுவின் பெரு-முயற்சியின் பயனாக அனைவரும் ஒரே அமைப்பாக, ஒற்றுமையாகப் பணியாற்ற வேண்டுமெனும் முடிவுக்கு வந்தனர். திரு பிள்ளையவர்களின் குழுவின் பரிந்துரைகளில் சிலவற்றை அரசு ஏற்றுக்கொண்டது. பிள்ளையவர்களின் சுற்றுப் பயணம் பயன் பெற்றது.

# 11. நாட்டு மொழிகளின் மீது அன்பு

1916-ஆம் ஆண்டில் சென்னை சட்டமன்ற மேலவையில் பயிற்று மொழி பற்றி வாக்கு வாதம் நடைபெற்றது. தொடக்க நிலையிலிருந்தே ஆங்கில மொழியைப் பயிற்று மொழியாக வைக்க வேண்டுமென சிலர் வாதித்தனர்.

திரு பிள்ளையவர்கள் சொற் பொழிவாற்றுகையில் "நம் நாட்டு மொழிகள் - அவற்றின் இலக்கியம்-மிகவும் பழமையானவை; உயர்ந்தவை. நம் சிறுவர் சிறுமியர்க்கு இளவயது முதலே தாய்மொழியை நன்கு கற்பிக்க வேண்டும். அப்போதுதான் அவர்களிடையே நாட்டுப் பற்றை வளர்க்க இயலும்" என்று வலியுறுத்தினர். மேலும் அவர் பேசுகையில் "மற்ற மாநிலத்தாரை விடச் சென்னை மாநிலத்து மக்கள் ஆங்கிலத்தில் சிறந்த பேச்சாளிகள் என திரு. நாயர் எனும் உறுப்பினர் தம் சொற்பொழிவில் குறிப்பிட்டார். உறுப்பினர்கள் ஆங்கிலத்தில் போன்று தம் தாய்மொழியில் சொற்பொழி வாற்ற இயலுமா? நம்மில் எவராவது 'திருக்குறளில்' உள்ள ஒருவெண்பாவிற்குச்சிறந்தவிளக்கம் அளிக்கஇயலுமா?" என்று அறை கூவினார். உறுப்பினர்களின் ஆங்கில மொழி மோகத்தை எடுத்துக் காட்டிச் சாடினார்.

கேசவப் பிள்ளையின் இந்திய மொழிப் பற்று சீரியது.

# 12. தெலுங்கு கவிக்கொரு நினைவுச் சின்னம்

கிரேக்க நாட்டில் 'ஹோமர்' எனும் மாகவிஞர் ஒருவர் இருந்தார். அவர் வாழ்ந்திருந்த நாட்களில் அவரை யாரும் மதிக்க வில்லை. அவரது மதிப்பை உணரவில்லை. அவர் மரணமடைந்த பின்னரே அவரது அருமை, சிறப்பு அவர்களுக்கு விளங்கியது. அவர் பிச்சையேற்று வாழ்ந்த கிராமத்தவர்கள் அனைவரும் 'ஹோமர் எங்கள் ஊர்க்காரர்' என்று பெருமைபட்டனர்.

ஆந்திர மாகவிஞர் போதனா (potana) வாழ்விலும் அவ்வாறே நடைபெற்றது அவர் வேண்டி விரும்பி ஏழ்மையை மேற் கொண்டார். பொருட் செல்வத்தைவிட இராமனின் அருட்செல்வமே சிறந்தது, சுகமானது என்று நம்பினார். 'ஒண்டி மிட்டா'வில் கோதண்டராம சுவாமியின் ஆலயம் மிகவும் பெரியது. பம்மர போதராஜீ 'ஒண்டிமிட்டா இராமர்லயம் அருகில் உள்ள 'ஊருண்டி'யை போதனா வாழ்ந்த இடங்களாக மக்கள் கருதுகின்றனர்.

'பக்திச் சுவை நனிச் சொட்டச் சொட்டப் பாடிய' கவி போதனாவுக்கு நினைவுச் சின்னம் ஒன்றை ஏற்படுத்த வேண்டுமென்று திரு கேசவப் பிள்ளை 1918-செப்டம்பர் திங்கள் மூன்றாம் நாளில் 'ஹிந்து' பத்திரிக்கையில் ஒரு பெரிய கட்டுரை எழுதினார்.

அன்றைய கட்ப்பை மாவட்ட ஆட்சித் தலைவர் ஜி. எப் பிரயண்ட் (C. F. Bryant) அவர்களோடு 'ஒண்டி மிட்டா'வுக்குச் சென்று அவருக்கு அங்கு செய்ய வேண்டிய செயல்களை எடுத்துரைத்தார்.

தமிழ் நாட்டைச் சார்ந்த திரு. கேசவப் பிள்ளை தெலுங்கு கவிஞர் போதனாவின் மீது காட்டிய பக்தி 'ஆந்திரபத்ரிகா' எனும் தெலுங்கு நாளேட்டின் உரிமையாளர் தேசோத்தாரக நாகேஸ்வர ராவ் அவர்களைப் பெரு வியப்பில் ஆழ்த்தியது. 1914-ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்களில் அவர் திரு. பிள்ளை யவர்களுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் "ஆந்திரர்கள் உங்களுக்குப் பெரிதும் நன்றிக் கடன் பட்டுள்ளனர்" என்று எழுதியுள்ளார்.

# 13. எல்லா மதங்களும் ஒன்றே

திரு கேசவப் பிள்ளையின் முன்னோர்கள் முதலி லிருந்து வைணவ சம்பிரதாயத்தைக் கடைப் பிடித்த வர்கள்.

கேசவப் பிள்ளையின் சகோதரர் தான் சேகரித்த பல அரிய நூல்களைத் திருவரங்கத்தில் உள்ள அரங்க நாதசுவாமி அறநிலை நூலகத்திற்கும், திருப்பதியிலிருக் கும் திருவேங்கடவன் கிழக்கியல் ஆய்வுக் கூடத்திற்கும் அன்பளிப்பாக அளித்து விட்டார்.

வைணவ சம்பிரதாயத்தை முழு நம்பிக்கையுடன் திரு பிள்ளையவர்கள் பின்பற்றினார். ஆழ்வார்களின் திவ்யபிரபந்தங்களை நாடோறும் ஓதி வந்தார். பிரிட்டிஷ் கயானாவுக்குச் சுற்றுப் பயணமாகச் சென்றபோதுகூட, தன்னோடு நாலாயிர திவ்ய பிரபந்தத்தை எடுத்துச் சென்றார்.

வைணவர் தன்னை விடச்சிறியவர்களைக் கூடத் தெய்வ சமமாக நடத்துவர். தமிழில் 'பெருமான்' என்பர். திரு. இராஜகோபாலாச்சாரியாரை அளவளாக வும் போது "என்ன பெருமான் நலமா?" என்றே வினவுவார்.

வைணவத்தில் நம்பிக்கை கொண்டிருந்த போதிலும் பிள்ளையவர்கள் மற்ற சமயங்களின் மீது எள்ளளவும் காழ்ப்புணர்ச்சி கொண்டாரில்லை. 1914-ஆம் ஆண்டு ஜூன் திங்கள் 16-ஆம் நாள் திருச்சி சைவ மகாசபையில் திரு பிள்ளையவர்களின் சொற்பொழிவு இவ்வாறிருந்தது. "எல்லா உயிர்களிடத்தும் சமத்துவம் கொண்டிருப்பதே,

நற்குணத்தின் சிறப்பு'' என்று உபநிடதங்கள் விவரிக்கின்றன. அஞ்ஞானிகளுக்கு அன்பும்கடவுளும்வெவ்வேறு பொருட்கள். ஆனால் ஞானிகளுக்கு அன்பே கடவுள். 'எல்லா மதங்களின் அடிப்படை கொள்கை, சாரம் ஒன்றே' என்று தெரிவிக்கும் சநாதன தர்மத்திற்காக நான் பெருமையடைகிறேன்.''

சிறிது காலம் திவ்ய ஞான சமாஜத்தில் ஆர்வம் காட்டிய திரு. பிள்ளைவர்கள் 1884-இல் சென்னையில் நடைப் பெற்ற மகாசபையிலும் கலந்து கொண்டார். திரு. பிள்ளையவர்கள் மதத்தின்மீது மதிப்பு கொண்டிருந்தாலும் வெறி கொண்டாரில்லை. அவர் பால்ய விவாகத்தை எதிர்த்தார். தீண்டாதோர் என்று சமுதாயத்தால் ஒதுக்கப் பட்டவர்களை அரவணைத்துச் சமுதாய மேன்மைக்குப் பாடுபட்டார்.

# 14. அவரது அருட்குணம்.

குத்தியில் கேசவப் பிள்ளையவர்களின் வீட்டின் அருகிலேயே ஒரு மலை இருக்கிறது. அம்மலை குரங்குகளின் நிலையம். ஒரு நாள் சில குரங்குகள் போராட்டத்தில் இறங்கி ஒரு குரங்கினைத் தாக்க ஆரம்பித்தன.

கேசவப் பிள்ளை அப்பொழுதே உணவை முடித்துக் கொண்டு வீட்டுத் தாழ்வாரத்தில் படுத்துக் கொண்டு நாளிதழ் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தார். மற்ற குரங்குகளின் தாக்குதலால் தாக்குண்ட குரங்கு எவ்வாறோ அக்குரங்குகளிடமிருந்து தப்பித்துக் கொண்டது. குற்றுயிரும் குலையுயிருமாக அது ஓடிச்சென்று கேசவப் பிள்ளையின் மடியில் அச்சமின்றிஅமர்ந்து கொண்டது.

கேசவப் பிள்ளையின் வீட்டில் சிறு குழந்தைகள் எண்ணிக்கை அதிகம். அவர் படுத்துப் பத்திரிக்கை படிக்கையில் குழந்தைகள் அவர்மீது விழுந்து விளையாடுவது வழக்கம்.

ஆகவே சிறு குழந்தை எதுவோ வந்து தன் மடியில் படுத்துக் கொண்டது என்று பிள்ளை நினைத்துக் கொண்டார். இடது கையில் நாளிதழைப் பிடித்துக் கொண்டு படித்தவாறே வலது கையால் மடியில் வந்து படுத்துக் கொண்ட குரங்கின் முதுகினைத் தடவினார். ஏதோ 'சில்' லென்று ஈரம் அவரது கையிற் பட்டது.

கேசவப் பிள்ளை திடுக்கிட்டு உடனே படிப்பதை விட்டு மடியைப் பார்த்தார். அங்கே குழந்தை இல்லை. குரங்கு. உடலெங்கும் காயம். ஒரே குருதி மயம். கேசவப் பிள்ளை வியப்பெய்தினார். அதற்கு மருத்துவம்

செய்வித்து உணவளித்துப் பின் சுதந்திரமாகச் செல்ல விடுத்தார்.

குத்தி மலையில் ஒரு சிறுத்தை இருந்தது. ஒரு நாள் இரவு புலி வேட்டைக்காரர்கள் சிலர் அதனைப் பிடிக்க ஒரு பெருங் கூண்டை அங்கே வைத்தனர், அந்தக் கூண்டின் அருகில் ஒரு ஆட்டையும் கட்டி வைத்தனர். அந்த ஆடு எவ்வாறோ தன் கட்டை அறுத்துக் கொண்டு கேசவப் பிள்ளையின் வீட்டை யடைந்தது. உண்மை யைத் தெரிந்து கொண்டு அவ் வேட்டைக்காரர்களுக்குப் பணம் கொடுத்து விட்டு அந்த ஆட்டை வாங்கி வளர்த்தார்.

வரட்சி மிக்க ஊர்களில் குத்தியும் ஒன்று. அந்த ஊரில் 'ஒரு பெரிய கிணறு-'பெனகல பாவி'-இருக்கிறது. அதுவே அவ்வூரார் அனைவரின் குடிநீருக்கு ஆதாரம். அந்தக் கிணற்றில் ஒரு சமயம் நீர் மிகவும் குறைந்து விட்டது. அச்சமயத்தில் கேசவப் பிள்ளை சந்தா சேகரித்து ஐயாயிரம்ரூபாய் செலவில் ஊரார் அனைவருக் கும் பயன்படும் வகையில் அக்கிணற்றைச் சீர் படுத்தினார்

அந்தக் கிணறு மிகவும் ஆழமானது. ஒரு நாள் ஒரு விதவை அதில் விழுந்து விட்டாள். அவளை மேலே எடுக்க எவரும் முன்வரவில்லை. அம்மதிய வேளையில் கேசவப் பிள்ளை தம் வீட்டில் உறங்கிக் கொண்டிருந் தார். பிள்ளையவர்களின் அன்னை அவரை எழுப்பி விவரத்தைக் கூறினார். அவர் உடனே ஒரே ஓட்டமாய்ச் சென்று உடுத்திய உடைகளோடு அப்பெருங் கிணற்றில் குதித்து அவளை மேலே கொணர்ந்தார்

ஒரு சமயம் குத்தியைப் 'பிளேக்கு' நோய் கடுமை யாகத் தாக்கியது. ஒரு பெண் எல்லம்மா கோயில்

அருகே இறந்து விட்டாள். அச் சவத்தை நெருங்கவே அனைவரும் அஞ்சினர். கேசவப் பிள்ளை அச் சவத்தைச் சுமந்து சென்றார். 'காலரா' நோய் அதிகமாக உள்ள இடங்களுக்கு மருந்துகளைச் சுமந்து கொண்டு கிராமம் கிராமமாக எடுத்துச் சென்று தந்தார்.

சேவையையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்த கேசவப் பிள்ளையின் வாழ்க்கையில் நடைபெற்ற பல நிகழ்ச்சிகளில் மேலே கூறப்பட்டவை சில எடுத்துக் காட்டுகள் மட்டுமே.

# 15. சென்னை சட்ட மன்ற மேலவையின் தந்தை

கிராஸ் பிரபுவின் (Lord Cross) சீர்த்திருத்தச் சட்டத்தின்படி சென்னையில் சட்ட மன்ற மேலவை ஏற்பட்டது. 1908-ஆம் ஆண்டில் கஞ்சாம் முதலாக பல்லாரி வரையுள்ள 11 மாவட்டங்களின் பிரதி நிதியாகத்திரு கேசவப் பிள்ளை அம் மேலவைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

அப்போது மேலவையில் 25 பேர் அதிகார மற்ற உறுப்பினர்களாக இருந்தனர். உறுப்பினர்களின் சொற்பொழிவுக்கு கால வரம்பரை யென்று எதுவும் இருக்கவில்லை.

கேசவப் பிள்ளையவர்களோடு அந்த நாட்களில் உறுப்பினர்களாக இருந்தவர்களில் திரு. பி. என் சர்மா, திரு. எம். வி. கிருஷ்ண சுவாமி ஐயர், திரு.பி. தியாகராஜ செட்டியார் முதலியவர்கள் முக்கியமானவர்கள்.

1919-ஆம் ஆண்டின் வரவு செலவு 'பட்ஜெட்' மீதான பிள்ளையவர்களின் சொற் பொழிவை 'மெயில்' பத்திரிக்கை விமர்சித்தது. ஆனால் 'ஹிந்து' பத்திரிக்கை மிகவும் புகழ்ந்தது. ஆசிரியருரைகளை எழுதியது.

1909-இல் மிண்டோ மார்லே (Minto Morley) 1919-இல் மாண்டேகு செம்ஸ் போர்டு Montague Chelms ford) சீர்த்திருத்தங்களின் படி சட்டமன்ற மேலவையில் பல மாறுதல்கள் ஏற்படுத்தப்பட்டன. கேசவப் பிள்ளை உறுப்பினராகத் தொடர்ந்து தேர்ந்தெடுக்கப் பட்டு வந்தார்.

1919-இல் சென்னை சட்டமன்ற மேலவையின் உதவித் தலைவராக ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

சைமன் பிரபு (Lord Simon) சென்னைக்கு வருகை தந்தபோது அவருக்குக் கேசவப் பிள்ளை 'சட்ட மன்ற மேலவையின் தந்தை' (Father of the House) என அறி முகப் படுத்தப் பட்டார்.

1919-26-இல் இருமுறை துணைத் தலைவராகப் பணியாற்றிய காலத்தில் சட்ட மன்ற மேலவையில் அரசைத் தீவிரமாக விமரிசித்தார்.

1909-இல் அவர் ஆங்கிலேயரை விமரிசித்து செய்த சொற் பொழிவைக் கேட்டு ஆளுநர் செய்வ தறியாது திகைத்து விட்டார். 1911-ஆம் ஆண்டில் "டைம்ஸ்" பத்திரிக்கை கீழ்க்கண்டவாறு எழுதியது. "எதிர்த்தரப்புத் தலைவர்களில் திரு கேசவப் பிள்ளை பிரபல மானவர். இவர் குரலெடுத்து விமர்சிக்காத மக்கட் குறையில்லை." விவசாயிகள், கூலிகள், கைதிகள் பற்றிய அவரது சொற் பொழிவுகள் பல விவரங்களைக் கொண்டிருந்தன.

# 16. வரக்காளர்களுக்குச் செய்த விண்ணப்பம்

கேசவப் பிள்ளை 1916-ல் சட்ட மன்ற மேலவைக்கு நடைபெற்ற தேர்தலில் மீண்டும் போட்டியிடுகையில் கீழ்க்கண்டவாறு அறிக்கை விடுத்தார்.

"1884-ல் ஜில்லா போர்டு உறுப்பினராக நியமிக்கப் பட்டதிலிருந்து மக்கட் சேவை செய்து வருகிறேன். 1884-ஆம் ஆண்டில் மக்கள் கழகத்திலும், 1885-இல் காங்கிரஸ் கட்சியிலும் உறுப்பினரானேன்.

இரண்டு வரட்சி நிவாரண குழுக்களின் செயலாளராக வும் குத்தி மக்கள் கழகத்தின் சுறுசுறுப்பான செயலாளராக வும் இருந்ததனால் தாழ்த்தப்பட்ட மற்றும் ஏழை மக்க ளின் வாழ்க்கை முறை மற்றும் இன்னல்களை நன்கு அறியக் கூடிய வாய்ப்பு எனக்குக் கிட்டியது.

1892-ஆம் ஆண்டிலிருந்து என் முயற்சியின் பயனாக 'சிவாய் ஜம்மு' புறம் போக்கு நிலங்களில் கல், மண் சேகரிப்பதற்காகச் செலுத்த வேண்டிய கட்டணங்கள் விலக்கப்பட்டன. அனந்தபுரம், பல்லாரி கர்நூல் மாவட்ட மக்கள் இதனால் பெரிதும் பயன்பட்டனர்.

காடுகளிலும் சிறைச் சாலைகளிலும் சில மாற்றங் கள் வருவதற்குத் தன் பெருமுயற்சி காரணமாகும் என்று தெரிவித்துக் கேசவப் பிள்ளை மேலும் கீழ்க்கண்டவாறு வெளியிட்டார்.

"சிறைச்சாலைகளில் மேனாட்டு முறைகளில் மேலும் பல மனிதாபமான வசதிகள் ஏற்படுத்தப் பட்டுள்ளன.

பெண் மற்றும் ஆண் குற்றவாளிகளுக்கு அவரவர் தேவைக்கேற்ப உணவு, உடை அளிக்கப்படுகிறது. பிரம்பால் அடிப்பது பெரிதும் குறைந்து விட்டது.

சிறிது கல்வி வசதிகள் கூட ஏற்படுத்தப் பட்டுள்ளது. கிறித்தவ மதமற்றோர்களுக்கு அவ்ரவர் மத தர்மங்களைப்போதிக்கும் வாய்ப்பு தரப்பட்டுள்ளது."

திரு. பிள்ளையவர்கள் தம் சக்தி யுக்திகளைச்சிறைச் சாலைகள், காடுகள் இவற்றின் மறு மலர்ச்சிக்குப் பயன் படுத்தினார். திரு. டி. எம். பி. நாயர் எனும் உறுப்பினர் வேடிக்கையாக, "திரு. பிள்ளை வர்கள் ஒன்று சிறைச் சாலையிலாவது இருப்பார். அல்லது காட்டிலாவது இருப்பார்" என்று கூறினார்.

# 17. நம் நாட்டவரின் புகழுரைகள்

கல்கத்தாவிலிருந்து வெளியாகும் "அம்ருத பஜார்" எனும் பத்திரிக்கை மிகவும் புகழ் பெற்றது. அப்பத்திரிக்கையில் கூட கேசவப்பிள்ளை பலக்கட்டுரைகளை எழுதி வந்தார்.

காடுகளின் பிரச்னைகளைப் பற்றிப் அவரது பெரு முயற்சியினைப் பாராட்டி 1912-ஆம் ஆண்டு டிசம்பர் திங்களில் அப் பத்திரிக்கையின் ஆசிரியர் திரு. மோதி லால் கோஷ் இவ்வாறு எழுதினார். "உங்களைப் போன்ற கர்ம வீரர்கள் ஒவ்வொரு மாவட்டத்திலும் அரை டஜன் பேர் இருந்தால் நாடு எவ்வளவோ நலமடையும்."

தாதாபாய் நௌரோஜியின் பிறந்த நாள் விழாவைக் குத்தியில் நடத்தியமைக்காகத் திரு பிள்ளையவர்களுக்கு நன்றி தெரிவித்து நௌரோஜி லண்டனிலிருந்து கடிதம் எழுதினார்.

சென்னை கவர்னராகப் பணியாற்றிய திரு. ரெட்டி நாயுடு, திரு பிள்ளையவர்களைத் தன் "கமாண்டர்" என்று நினைத்தார். உண்மைக்காகப் போராடும் "அபர பீஷ்மர்" என்று கேசவப் பிள்ளையவர்களை அவர் நினைத்தார்.

நம் நாட்டவரின் புகழுரைகள் பலவற்றில் ஓரிரண்டே மேலே தரப்பட்டுள்ளன.

# 18. வெளி நாட்டவரின் புகழ் மாலை

சட்ட மேலவை உறுப்பினராகத் திரு பிள்ளையவர்களைப் பல வெளி நாட்டவர்கள் கூட பெரிதும் புகழ்ந்தனர். 1916-இல் 'கில்மின்' என்ற ஐரோப்பியர் கடிதம் எழுதுகையில் "உங்கள் வாக்குவாதங்கள் மிகவும் அறிவு பூர்வமாக உள்ளதாலும், உங்கள் எண்ணங்கள் தூய்மையானவை என்பதாலும் உங்களைச் சட்ட மன்ற மேலவையின் மிகவும் மதிப்பிற்குரிய உறுப்பினராகக் கருதுகிறேன். பல இந்தியர்களிடம் காணப்படாத சமத்காரம் உங்கள் உடமையாக இருப்பது மற்றொரு சிறப்பு."

1917-இல் மாண்டேகு செம்ஸ்போர்டு பாரத நாட்டிலுள்ள மிக முக்கிய அரசியல் தலைவர்களுடன் கலந்துரையாடினார். அவர்களில் கேசவப்பிள்ளையும் ஒருவர்.

ஃபெடரிக் நிகல்ஸன் அனந்தபுர மாவட்ட ஆட்சித் தலைவராக இருந்தவர். அவரைத் தென்னாட்டில் ஒத்துழைப்பு இயக்க அமைப்பாளராகக் கருதினர். திரு. பிள்ளையவர்கள் அவருக்கு மிகவும் நெருங்கிய நண்பராக திகழ்ந்து ஒத்துழைப்பு இயக்க வளர்ச்சிக்குப் பெரிதும் பாடுபட்டார்.

குத்தியிலிருக்கும் இலண்டன் மிஷனோடுபிள்ளையவர்களுக்கு மேனாட்டார் பலரும் நண்பர்களாய்த் திகழ்ந்தனர்.

# 19. பிள்ளையின் வீரச் செயல்கள்

1925-ஆம் ஆண்டு மே-திங்களில் குத்தி வட்டத்திலுள்ள "சிந்தல செருவு" சுற்றப்புற கிராமங்களில் பெருமளவில் சச்சரவு நடைப்பெற்றது. அரசு அதிகமான காவல் படையை வரவவைத்து குத்தியில் வைத்தனர். அதன் பராமரிப்புச் செலவினங்கள் முழுவதையும் அம்மக்களே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று ஆணையிட்டனர்.

கேசவப் பிள்ளை இது தகாத செயல்] என்று அரசுக்கு எழுதினார். அதன் பலனாகக் கர்ட்னி (Courtney) என்ற ஐ. ஸி. எஸ். அதிகாரியை விசாரணைக்கென நியமித்தனர்.

விசாரணையில் ஆட்சித் தலைவரோடு கேசவப் பிள்ளையின் வாக்குவாதம் தீவிரமாக நடைபெற்றது. கர்ட்னி தன் அறிக்கையில் கேசவப் பிள்ளையின் மீது பழி சுமத்தினார்.

அரசு அமைப்பைத் திரு. கேசவப் பிள்ளை இழிவுபடுத்துகிறார் என்றும் சப் மேஜிஸ்டிரேட்டோடும் மற்ற உயர் அலுவலர்களிடமும் துடுக்காக நடந்து கொள்கிறார் என்றும் பலர் கூறுகின்றனர். அதில் உண்மை இல்லாமலில்லை என்று எழுதினார்.

குத்தி நிகழ்ச்சி குறித்து 1925-ஆம் ஆண்டு ஆகஸ்டு திங்களில் சென்னை சட்ட மேலவையில் திரு. ஏ. ராமசுவாமி முதலியார் ஓர் அவசர தீர்மானத்தைக் கொணர்ந்தார்.

திரு. கட்டமஞ்சி ராமலிங்கா ரெட்டி, திரு. கே.வி. ரெட்டி நாயுடு பிள்ளையவர்களை மிகவும் ஆதரித்தனர். அப்போது திரு. சி.பி. ராமசுவாமி அய்யர் சட்ட உறுப்பினராக (லா மெம்பர்) இருந்தார்' அவர் பிள்ளையவர்களுக்கு நெருங்கிய நண்பர்.

அவர் சுறுசுறுப்பாக இயங்கினார். இறுதியில் முடிவு சுகமாக அமைந்தது.

சிந்தல செருவு குற்றவாளிகளை உயர்நீதி மன்றம் குற்றமற்றவர்கள் எனத் தீர்ப்பளித்து விடுதலை செய்தது. இது கேசவப் பிள்ளையவர்களின் மகிழ்ச்சியை இரட்டிப்பாக்கியது.

# 20. துரைகளின் வெறியாட்டம்

சில ஆங்கிலத் துரைகள் தம்மைத் தெய்வீகமானவர்கள் என்றும் ஆட்சி புரியும் உரிமை தம்க்கே உரித்தாகும் என்று கருதி கர்வங் கொண்டனர்.

பெனுகொண்டாவில் ஸைக்ஸ் (Skyes) என்னும் ஐ. ஸி எஸ்., உதவி ஆட்சித் தலைவர் தான் தண்டனையளிப்பவர்களுக்குத் தன் கைகளாலேயே சாட்டையடி கொடுத்துத் துன்புறுத்தி வந்தார்.

அனந்தபுரம் மாவட்ட ஆட்சித் தலைவர் ஸ்காட் என்னும் துரை ஒரு முறை பெனுகொண்டா முகாமில் ஒரு சிகையலங்கார கலைஞரை இழிவு படுத்தினார். துரை அவனுடைய ஒரு பக்க மீசையை நீக்கினார். கேசவப் பிள்ளையவர்களுக்கு இச் செய்தி எட்டியது.

உடனே துரையின் மீது நீதி மன்றத்தில் வழக்குத் தொடுத்து நஷ்ட பரிகாரத்தை அக் கலைஞருக்கு வாங்கியளித்தார்.

ஓர் ஆங்கிலோ-இந்திய ஓவர்ஸீயர் ஹிந்துபுரத்தில் வரட்சி நிவாரண பணியை மேற் பார்வையிட்டுக் கொண்டிருந்தார். அவரை ஓர் அந்தணர் ஏதோ கூறினாரென்று அவ் வந்தணரைச் சாட்டையால்அடிக்க வேண்டுமென்று 'ஷிப்லி' என்னும் ஒரு மாவட்ட ஆட்சித் தலைவன் ஆணையிட்டான்.

1910-ஆம் ஆண்டில் ஹிந்துபுரம் புகைவண்டி பிளாட்பாரத்தின் மீது கண்மண் தெரியாமல் துப்பாக்கிச்

கூட்டை நடத்தினர். அச் கூட்டில் புகைவண்டி சுமையாளி ஒருவரும் ஒரு மகமதிய இளைஞரும் மரணமடைந்தனர்.

இந்த நிகழ்ச்சிகளை யெல்லாம் கேசவப் பிள்ளை உடனுக்குடன் பத்திரிக்கையில் எழுதி நீதி கிடைக்குமாறு செய்தார்.

# ௨௧. 'தீன பந்து'

1910-ஆம் ஆண்டுக்கு முன்னர் சிறைச்சாலைகளில் குற்றவாளிகளின் நிலை மிகவும் கொடூரமாக இருந்தது. தேசீய குற்றவாளிகளுக்குச் சோறு போட மாட்டார்கள். போடும் ராகி களி உருண்டைகளும் அனைவருக்கும் போதாது. பலர் நோய்வாய்ப்பட்டு இறந்து கொண்டிருந்தனர்.

கேசவப் பிள்ளையின் அயரா முயற்சிகளின் பலனாக குற்றவாளிகளுக்குப் பல வசதிகள் தரப்பட்டன கைதிகளின் உணவளவை (ரேஷனை) அதிகரித்தனர் என்ற செய்தியினைக் கேட்டு, பிள்ளையவர்கள் தம் அன்னையிடம் சென்று "அம்மா! இதெல்லாம் உன் கருணையே! இது ஒரு சமாராதனை" என்று கூறினார் இச் செய்தியினைத் தெரிந்து கொண்ட சபர்மதி ஆசிரம வாசியான திரு பனாரஸ் தாஸ் சதுர்வேதி மிகவும் மகிழ்ச்சியுடன் பாராட்டி எழுதினார்.

இந்தச் சமாராதனைக் குறித்துச் சதுர்வேதி தன் தோழர்களுக்கு அடிக்கடி கடிதம் எழுதினார்

சென்னை மாகாணத்தில் சிறைச்சாலைகளின் நிர்வாகப்பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்த திரு. ஸ்ரீனிவாச அய்யங்கார் பிள்ளையர்களின் மிகவும்நெருங்கிய தோழர். அனைத்துச் சிறைச் சாலைகளுக்கும் சென்று பார்ப்பதற்கு வசதியாகத் தமக்கொரு அனுமதி சீட்டைத் தருமாறு அவரை வேண்டினார்

தவறு செய்த மனிதர் நல்ல வழிக்கு திரும்பி வருமாறு மனந்திருந்தி மாற முயற்சி செய்ய வேண்டும். என்றும் கேசவப்பிள்ளை முனைந்தார்.

அவரது மானுட நோக்கு மிகச் சிறந்தது. எங்கு குற்ற வாளிகளுக்குத் துன்பம். வசதியின்மை ஏற்பட்டாலும் அது திரு. பிள்ளையவர்களின் கவனத்திற்கு கொண்டு வரப் பட்டது,

1921-ல் பல்லாரி சிறைச்சாலையில் ஆறு பஞ்சாபி குற்றவாளிகளை அடைத்தனர். அவர்களில் ஒருவர் தாம் ஒரு துறவியென்றும் தமக்குப் பாலுணவு வேண்டும். என்று வேண்டினார்.

சிறைச்சாலை அதிகாரிகள் அதற்கு இணங்காமற் போகவே அவர் ஒருவாரம் உணவெடுத்துக் கொள்ளாமல் தம் எதிர்ப்பைத் தெரிவித்தார். அவர் உயிரைக் காப்பாற்றுமாறு பிரபல நடிகர் பல்லாரி ராகவா கேசவப் பிள்ளைக்கு ஒரு கடிதம் எழுதினார். "அன்புள்ள தீனபந்து" என்று ராகவா பிள்ளையவர்களை விளித்து எழுதினார்.

# ௨௨. அனந்தபுர நானாசாகிபு

1882-இல் குத்தியில் மக்கள் கழகத்தை நிறுவிய கேசவப்பிள்ளை நெடுங்காலம் அதன் செயலாளராகவும், தலைவராகவும் பணியாற்றினார்.

'குருக் ஷாங்க்' எனும் மாவட்ட ஆட்சித் தலைவர் அவரை மாவட்டக்குழு உறுப்பினராக நியமித்தார். மும்முறை தேர்ந்தெடுக்கப்பட்டு 1930-வரை அவர் ஆட்சிக் குழுவோடு மிகவும் நெருங்கிய உறவு கொண்டிருந்தார்.

அனந்தபுரம் மாவட்ட முன்னேற்றத்திற்கு, வளர்ச்சிக்கு சட்ட மன்ற மேலவை உறுப்பினராகவும் மாவட்ட குழு உறுப்பினராகவும் அவர் செய்த சேவைகளுக்கு மக்கள் அவரை "அனந்தபுர நானாசாஹிப்" என்று அன்புடன் அழைக்கத் தலைப்பட்டனர்.

குந்தகல் வாசியான எம். ஹம்பய்யா பூரி என்பவரின் நன்கொடையுடன் பெருங்காய்ச்சல் நிவாரணத்திற்காகப் பெருமளவில் மருந்துகளை வரவைத்து மாவட்ட மக்களைக் காப்பாற்றினார்.

1914-ஆம் ஆண்டு ஏப்ரல் திங்களில் சென்னை சட்டமன்ற மேலவையில், அனந்தபுரம் மாவட்டத்தில் பெனுகொண்டாவில் மட்டுமே உயர்நிலைப் பள்ளி இருக்கிறது என்றும் வளர்ச்சி குன்றிய அப் பகுதியில் கல்லூரியை அமைக்க வேண்டிய இன்றியமையாமையை மிகவும் வலியுறுத்திப் பேசினார்.

மாவட்டத்தில் பல இடங்களிலும் மருத்துவமனைகள் பள்ளிக் கூடங்கள், ஓய்வகங்கள் பிள்ளையவர்களின் பெரு முயற்சிகளாலேயே ஏற்படுத்தப் பட்டன.

# 23. நீர்ப் பாசன வசதிகள்

துங்க பத்ரா திட்டம் மற்றும் பிறசிறு பாசன திட்டங்களுக்காகக் கேசவப்பிள்ளை ஓய்வின்றிப் போராடினார்.

இவர் எழுதிய கடிதமொன்றிற்குச் சட்ட உறுப்பினர் திரு. ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் பதிலிருக்கையில் "உங்கள் பெரு முயற்சி, நல்லெண்ணத்திற்கு நிஜாம் ஆட்சியினரின் மனம் கரைந்தால் மாநிலத்தின் நீர்பாசன வசதிகள் ஏற்பட்டு மாநிலத்தார் அனைவரும் உங்கள் பெயரைச் சொல்லிக் கொள்வார்கள்" என்று எழுதினார்.

1925-ஆம் ஆண்டு மார்ச்சு திங்களில் அவர் சட்டமன்ற மேலவைகளில் செய்த சொற்பொழிவு அனைத்து உறுப்பினர்களையும் பெரிதும் கவர்ந்தது "இப்போது 'தத்த மண்டல'த்தில் அமைக்கப் பட்டுள்ள வேலைகளெல்லாம் விஜய நகர ஆட்சிக் காலத்தவை. இன்னும் கூறப் போனால் சோழ அரசர்களின் காலத்தவை. எல்லா கடலோர மாவட்டங்களையும் ஆங்கில அரசு பசுமையாக்கியது. நிரந்தரமாக இருக்கும் திட்டங்களை அமைத்தால் வரட்சி நிவாரணத்திற்குச் செலவிடும் கோடிக்கணக்கான ரூபாய்கள் மிச்சமாகும். மக்களின் நன்றிக்கும் உரியவர்களாவீர்கள்."

"உயர்ந்த இனத்திற்கு வாரிசுகளான மக்கள் இந்தத் தத்த மண்டலத்தில் வாழ்கின்றனர். இவர்கள் இன்று பசியால் வாடுகின்றனர். அஸ்ஸாம் வரையில் வாழ்வூரை விட்டுச் செல்கின்றனர். இங்குள்ள போயவீரர்களே ஒரு காலத்திய விஜய நகரத்துப் போர் வீரர்கள். அத்தகைய இவர்கள் இன்று தம் வயிற்றுப் பசியினைப் போக்கிட கொள்ளையிடவும் துணிந்துள்

ளனர். பாவம். அவர்கள் மட்டும் வேறு என்ன செய்வார்கள்? சொல்லுங்கள். செய்வதற்கு வேலை கிடைக்காதபோது ஸ்காட்லாந்து மக்கள் என்ன செய்தார்கள்? இவர்களும் அவ்வளவே''

1925-இல் தத்த மண்டலத்தின் நீர்ப்பாசன வசதி குழுவின் உறுப்பினராகி இவர் துங்கபத்ரா திட்டத்திற்குப் பெரு முயற்சி செய்தார்.

# 24. காட்டு விவகாரங்கள்

1912-க்கு முன்னர் காடுகளில் பசுக்களை மேய்ப்பதற்குப் 'புல்வரி' இருந்தது.

கேசவப் பிள்ளை இதனைத் தீவிரமாக எதிர்த்துச் சட்ட மன்ற மேலவையில் ஒரு தீர்மானத்தைக் கொணர்ந்தார்.

காடுகளின் ஆட்சி முறைகளைப் பரிசீலிப்பதற்காக அரசு இணங்கியது. ஐவர் கொண்ட குழு ஒன்று அமைக்கப்பட்டது அதில் பிள்ளையவர்களும் ஒருவர்,

இந்தக் குழுவின் பரிந்துரையின் பேரில் காட்டுப் பஞ்சாயத்துகள் ஏற்பட்டன சென்னை மாநிலத்தாரின் இச் சீர்த்திருத்தத்தை நிஜாம், மைசூர் மாநிலத்தார் கூடப் பின்பற்றினர்.

திரு பிள்ளையவர்கள் 1902-யிலேயே சென்னை ஆளுநருக்குக் காட்டுத்துறை சட்டதிட்டங்கள் ஏழை மக்களை எவ்வாறு துன்புறுத்துகின்றன என்பதை விவரமாக விவரித்து நான்கு வெளிப்படை கடிதங்கள் எழுதினார்.

ஏழைகளின் அன்பு தோழராகத் தம்மைப் பிள்ளையவர்கள் வருணித்துக் கொண்டார்.

1903-ஆம் ஆண்டு ஜூலைத் திங்களில் சென்னை ஆளுநர் 'ஆம்ப்தில்' அனந்தபுரம் வந்த போது காடுகளின் பிரச்னைகள் மீது கலவரம் ,நடந்து கொண்டிருந்தது.

ஆளுநர் பிள்ளையவர்களையும் மற்ற சிலரையும் அழைத்து, காடுகளின் பிரச்னைகளைப் பற்றி அவர்கள் கூறியவற்றைப் பொறுமையுடன் கேட்டார்.

ஆனால் அவர் அதற்குள் வைஸ்ராயாக உயர்வு பெற்று சென்று விட்டார். புதிய ஆளுநர் ஸிம் துரை என்பார் அப்பரிந்துரைகளைத் தள்ளி விட்டார். அதற்குப் பிள்ளையவர்கள் தம் வெறுப்பைப் போராட்டம் செய்வதின் மூலம் வெளிப்படுத்தினார்.

குழு உறுப்பினர் எச். ஏ. ஸிம் அவர்களை விசாரணைக்கு அனுப்பினர். அவர் கேசவப் பிள்ளை செய்து வரும் போராட்டம் நியாய மானதே என்று அறிக்கை அனுப்பினார்.

# 25. மறைவு

ஒருவர் நல்லவரா தீயவரா என்பதை அவரது மரணம் காட்டி விடும் என்பர். பிள்ளையவர்களின் மரணமே அவர் ஒரு புண்ணியவானாக இவ்வுலகுக்குப் பறை சாற்றியது.

1933-ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் 28-ஆம் நாள். சிறைச் சாலைகளில் உள்ள கைதிகளுக்கு மோர் அளிக்க வேண்டுமென்று வேண்டி 'ஹிந்து' பத்திரிக்கைக்கு ஒரு கடிதம் எழுதினார்.

பின்பு திவ்ய பிரந்தமான 'திருவாய்மொழி'யைச் சிறிது நேரம் படித்தார். பின்பு படுத்தார். அப்படுக்கையில் உறங்கிய உறக்கமே நெடுந்துயிலாக மாறியது.

அரை நூற்றாண்டுக் காலம் தன்னைச் சமூக சேவையில் இணைத்துக் கொண்ட ஒரு மகானின் வாழ்க்கை முடிந்தது.

அவர் பெரிய கல்வி ஏதுவும் கற்றவரில்லை. "வாழ்க்கையின் ஏற்றத் தாழ்வுகளே தன் பல்கலைக் கழகங்கள்" என்றார் ரஷ்ய கதாசிரியர் மாக்ஸிம் கார்க்கி. இவ்வாழ்க்கை பல்கலைக்கழகத்தில் அவர் கற்றதே உண்மையான கல்வி.

ஏழையாகப் பிறந்து ஏழையாக வளர்ந்து, ஏழை-களுக்காக இறுதி வரை பாடுபட்டு ஏழையாகவே இவ்வுலகைவிட்டு மறைந்தார் 'ஏழைபங்காளர்' திரு. பட்டு கேசவப்பிள்ளை.

# 26. நினைவுச் சின்னங்கள்

அனந்தபுர மாவட்டத்தில் கேசவப்பிள்ளை யவர்களுக்குச் சீடர்கள் பலர் இருந்தனர். பிள்ளையவர்களுக்கு மிகவும் விருப்பமான சேவை தீண்டாமை ஒழிப்பு.

1935-அனந்தபுரத்தில் ஏற்படுத்தப்பட்ட அரிஜன விடுதிக்குக் "கேசவா வித்யா நிலையம்'' என்று பெயரிட்டனர்.

அதனை ஆரம்பித்து வைக்கையில் அன்றைய காங்கிரஸ் தலைவர் திரு. பாபு ராஜேந்திர பிரசாத் அவர்கள், முதன் முதல் காங்கிரஸ் மாநாட்டிற்குப் பிரதி நிதியை அனுப்பிய அனந்தபுர மாவட்டத்தைப் பெரிதும் வாழ்த்திப் பாராட்டினார்.

1954-ஆகஸ்டு திங்கள் 20-ஆம் நாளில் அனந்தபுரம் மாவட்ட தொழிற்சாலை பொருட்காட்சிச் சாலை கேசவப் பிள்ளையின் பெயரில் மாற்றப்பட்டது.

1947-இல் சென்னையில் உள்ள சூளையில் ஏற்பட்ட பூங்கா மற்றும் விளையாட்டுத் திடலுக்குத் 'திவான் பகதூர்' கேசவப் பிள்ளை பூங்கா என்று பெயரிட்டனர்.

சென்னை பச்சையப்பன் கல்லூரியில் திறமை மிக்க அரசியல் துறை மாணவர்களுக்குப் பிள்ளையவர்களின் பெயரில் பரிசு ஏற்படுத்தப் பட்டது.

1960-இல் இவரது நூற்றாண்டு விழா நாட்டின் பல இடங்களிலும் மிகவும் சிறப்பாக நடத்தப் பெற்றது.

# 27. கோட்டையில் அவரது படம்.

திரு. கேசவப் பிள்ளையவர்களின் திரு உருவப் படத்தை 15-2-1939 அன்று தமிழக அரசு தலைமை செயலகத்துக் கமிட்டி அறையில் திரு. எஸ். ஸ்ரீ நிவாசய்யங்கார் திறந்து வைத்தார். சென்னை பிரதிநிதி சபைத் தலைவர் திரு புலுசு சாம்ப மூர்த்தி தலைமை தாங்கினார். சென்னை அரசாங்கச் சபைத் தலைவரான டாக்டர். யு ராமாராவ் பேசுகையில் 1919 முதல் 1926 வரை சட்டமன்ற மேலவை துணைத் தலைவராக இந்த திரு பிள்ளையவர்களின் திரு உருவப் படம் இந்த அறையில் இருக்க வேண்டியது மிகவும் அவசியமென்றும் நியாயம் என்று எடுத்துரைத்தார்.

பிறகு திரு. இராஜகோபாலாச்சாரியார், திரு. ஸி கே, வர்க்கி, ராஜா, ஸர். அண்ணாமலைச் செட்டியார். சேலம் திரு. விஜயராகாவாச்சரியார் ஸர். சார்லஸ் ஹண்டர் முதலிய பல பிரமுகர்களிடமிருந்து வந்திருந்த வாழ்த்துச் செய்திகளைக் ~~கேசவப் பிள்ளையவர்களின் புதல்வர்~~ திரு தாமோதரம் பிள்ளை படித்துக் காட்டினார்

பிறகு திரு. எல். ஸ்ரீநிவாசய்யங்கார் பேசுகையில் "முதன் முதலாக 'ஹிந்து' நிருபராக அவர் வேலை செய்ய ஆரம்பித்தது முதலாக இறுதிவரை, 50 ஆண்டுகளாக அவர் ஒடுக்கப்பட்டவர்கள், ஏழைகள், விவசாயி

கள் ஆகியோருக்காகப் பாடுபடும் வீரரென்று பெயர் வாங்கினார் தம்முடைய மனப்பூர்வமான உண்மை யினால், தாம் மனதில் கொண்டிருந்த சீர்த்திருத்த ஆர்வத்தினாலும் அவர் தம்முடைய எதிரிகளைக் கூட மாற்ற வல்லவரானார்'' என்றார்.

பிறகு மேயர் திரு கே. வெங்கடஸ்வாமி நாயுடுவின் நன்றியுரையுடன் அவ்விழா இனிது முடிந்தது.

Note: The Telugu Edition of 1987
has been commended for
Elementary + upper Elementary
School Libraries in A.P.
A second edition is
has gone for reprint.
2). This book in TN has
greater relevance as
Kesava Pillai's Legislative
work 1908-1930 was
of a unique nature in
his humanitarian approach
— Labour + Prison conditions
[signature] 23/12/87

# 28 பிரமுகர்களின் வாழ்த்துக்கள்

"வங்காள நாட்டிற்குச் சுரேந்திரநாத் பேனர்ஜி; பம்பாய் மாநிலத்திற்குக் கோகலே எப்படிப் பட்டவர் களோ தென்னிந்தியாவிற்குக் கேசவப் பிள்ளை அத்த கையவர்" என்று ஐதராபாத் புல்லட்டின் குறிப்பிட்டது.

"தத்த மண்டலங்களின் வளர்ச்சிக்கு ஒருங்கி ணைந்து கேசவப் பிள்ளை தனித்துச் செய்த முயற்சி, கடும் உழைப்பைப் போல் வேறெருவரும் செய்ய வில்லை" என்று 'ஆந்திர நாட்டுத் திலகர்' காடிசர்ல சர்வோத்தமராவ் குறிப்பிட்டார்.

"கேசவப் பிள்ளையின் புகழுக்குக் காரணம் அவர் மக்களின் பிரதி பிம்பமானதே. விவசாயிகளுக்கும், கூலி களுக்கும் ஆத்ம சக்தி அவர்" என்று ஸர் பாத்ரோ புகழ்ந்தார்.

"என் சிறு வயதிலேயே கேசவப் பிள்ளையின் புகழ் வானை எட்டியது. நியாயமானவற்றிற்குப் போராடும் வீரராக அவர் நமக்கு உற்சாகத்தை ஏற்படுத்துகிறார்" என்று நீலம் சஞ்சீவரெட்டி புகழ்ந்தார்.

பப்பூர்ல ராமாசார்யுலு ஒரு சிறந்த பத்திரிக்கைய' சிரியர். கேசவப் பிள்ளையின் பெயரில் உள்ள 'பட்டு' என்பதற்கு மூன்று விளக்கங்களை அவர் அளித்தார் 'பட்டு' என்றார் தெலுங்கில் பெரு முயற்சி என்றும்; பட்டு என்றால் பட்டுத் துணி என்றும்; பட்டு என்றால் அருட் குணம் என்றும் பொருள். இவையனைத்தும் கேசவப் பிள்ளையவர்களின் குணங்களில் இணைந்துள்ளன"

"இராயல சீமையிலிருந்து தலைவர்கள் பலர் இன்று உருவாவதற்குச் கேசவப் பிள்ளையவர்கள் உண்டாக்கிய எழுச்சியே காரணம் என்றால் அது மிகையாகாது" என்றார் ஐ. ஸி. எஸ் அதிகாரி திரு. ஜி. புல்லா ரெட்டி.

திரு பிரம்மய்யா எனும் தெலுங்கு கவிஞர் தன் குத்தி தந்தான கதையில் கேசவப் பிள்ளையின் வாழ்க்கையைச் சித்தரிந்துள்ளார்.

வாழ்க அவர் புகழ்.

வணக்கம்



